13th November 1961]

(இ) இந்தப் பகுதியில் குடிநீர் வசதிக்காக புதிய திட்டம் ஏதாவது உண்டா?

THE HON. SRI M. A. MANICKAVELU : : (அ) The drinking water sources in the villages in the Umangalam firka where the Guineaworm disease is endemic were treated with D.D.T. The infected persons were given medical treatment.

(இ) Proposals for providing drinking water facilities by constructing overhead tanks in 13 villages in the firka are under consideration.

SRI A. GOVINDASAMI : தேங்கியிருக்கிற செம்மண் குடி நீரைச் சாப்பிடுகிற காரணத்தினால்தான் அந்தப் பகுதி மக்கள் நரம்புச் சிலந்தி போன்ற வியாதிகளால் 6 மாதம், 7 மாதம் என்று நோய்வாய்ப்பட்டிருக்கிறார்கள். அரசாங்கம் இப்போது எடுத்திருக்கும் நடவடிக்கை போதாது. ஆகையால் தீவிர நடவடிக்கை எடுத்து எல்லா கிராமங்களுக்கும் குடி தண்ணீர் திட்டத்தை அவசரமாகக் கொண்டுவர ஏற்பாடு செய்வார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU : அந்தக் காட்சியை நானே கண்ணால் பார்த்தேன். ஆகையால்தான் தீவிரமாக நடவடிக்கை எடுத்து அதை நிவர்த்திக்க வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன.

SRI T. IRUSAPPAN : தலைவர் அவர்களே, விருத்தாசலம் தாலூகா மட்டுமல்லாமல் இன்னும் மலைப் பிரதேசங்களில் இருக்கக் கூடிய மலைவாசிகளுக்கும் இந்த நோய் வருகிறது. அங்கேயும் இந்த சுகாதாரத் தண்ணீர் திட்டத்தை ஏற்படுத்துவதற்கு நடவடிக்கை எடுப்பார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU : மலைப் பிரதேசத்திலிருந்தால் அதுவும் கவனிக்கப்படும்.

SRI A. GOVINDASAMI : ஊமங்கலம் பிர்க்காவில் மலைப் பிரதேசம் கிடையாது. 13 கிராமங்களில் நடவடிக்கை எடுக்கப் படுவதாகச் சொல்லுகிறார்கள். எல்லா கிராமங்களிலும் பொது ஜனங்களிடமிருந்து கண்ட்ரிப்யூஷன் வாங்காமல் நடவடிக்கை எடுக்க ஏற்பாடு செய்வார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU : 13 கிராமங்களில் ஓவர்ஹெட் டாங்க் அமைப்பது பற்றியது. மற்ற கிராமங்களில் ட்ரா வெல், போர் வெல் போன்ற ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன.

*Tourist Home for Tiruchendur*

* 2031 Q.—SRI A. A. RASHEED (on behalf of SRI M. S. SELVARAJAN) : Will the Hon. the Minister for Finance be pleased to state—

[13th November 1961

(a) whether there is any proposal to construct a Tourist Home in Tiruchendur; and

(b) If so, when?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) No, Sir.

(b) Does not arise.

*All-India Council of Technical Education (Southern Regional Committee)*

*** 2032 Q.—SRI S. M. ANNAMALAI :** கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) அண்மையில் சென்னையில் கூடிய தொழில் நுட்பக் கல்வியின் அகில இந்தியக் கவுன்சிலின் தென் பிராந்திய கமிட்டி நிறைவேற்றிய முக்கிய தீர்மானங்கள் என்ன ?

(இ) அவை பேரில் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) & (இ) A statement[a] is placed on the table of the House.

**SRI S. M. ANNAMALAI :** இங்கே செய்திருக்கிற சிபாரிசுகளில் இண்டர்வ்யூ மார்க் 15 சதவீதமாக இருக்கவேண்டும் என்பது ஒன்று. நம் மாநிலத்தில் 275 மார்க்குகளில் 75 மார்க் இண்டர்வ்யூவிற்கு என்று வைக்கப்பட்டிருக்கிறது. இதைக் குறைக்க முடியாது என்று சொல்லப்பட்டதே இதற்குக் காரணம் என்ன என்று தெரிவிப்பார்களா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** 75 மார்க் வைத்திருக்கும் முறை நடைபெறுவதில் எந்தவித குறையும் இல்லை. அதோடு தேர்ந்தெடுப்பதில் தரம் குறைந்திருப்பதாகவும் தெரியவில்லை. இருப்பதை மாற்றவேண்டுமென்று சொன்னால் காரணம் சொல்லவேண்டியிருக்கிறது. இருப்பதில் குறை இல்லை அதனால் மாற்ற வேண்டியதில்லை என்று நினைக்கிறோம்.

SRI K. VINAYAKAM : While awarding marks for the suitability of the candidate, much discretion is allowed to the members of the Committee and anything could be made up out of these 75 marks. So, would the Government consider the feasibility of reducing the range of marks so as to make it a foolproof system so far as selection is concerned?

THE HON. SRI C. SUBRAMANIAM : There can be no foolproof system or 'nail-proof' system. We have to depend upon the *bona fides* of the members of the Committee. My assessment of the work of the Committee in the last three or four years is that it has worked fairly well and it will be dangerous also to mainly depend upon the marks obtained in the examinations also. We know what methods are adopted to get marks for the purpose of getting admissions into the various technical educational institutions also. Therefore, an objective test is also necessary for

---

a Printed as Appendix 1 on pages 455–456 infra.